[30th August 1961

*Fair Rent Act*

* 1491 *Q*.—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவன்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 23-3-1959-ல் நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 944-க்கு அளித்த பதிலையொட்டி நியாய வாரச் சட்டத்தில் உள்ள குறைகளைப் போக்க எப்போது சட்டம் கொண்டுவரப்படும்?

(இ) நியாய வாரச் சட்டத்தை உயர்த்த உத்தேசமுண்டா?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) The question of framing a single Tenancy Act, in the place of the existing Tenancy Acts, is under the consideration of the Government. Suitable provisions to rectify the defects noticed in the working of the Fair Rent Act will be embodied in the proposed single Tenancy Act

(இ) There is no proposal under consideration to raise the fair rent payable under the Fair Rent Act.

SRI S. M. ANNAMALAI : முதல் கேள்விக்கு பதில் சொல்லும் போது 'It is under consideration' என்று சொன்னார்கள். 18-3-58-ல் இதே கேள்வியைக் கேட்டபோது இந்தப் பதிலைத்தான் சொன்னார்கள். 23-3-59-ல் கேட்ட கேள்விக்கும் இதே பதில்தான் கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். இப்போதும் இதே பதிலைத்தான் சொல்லுகிறார்கள். சென்ற மூன்றரை வருஷகாலமாக இதே பதிலைச் சொன்னால் எப்பொழுதுதான் முடிவு எடுப்பது? பிளானிங் கமிஷன் சிபார்சின் பிரகாரம் 75-25 வாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி ஏதாவது நடவடிக்கை எடுத்தார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : It is under consideration' என்றால் அதைப்பற்றி முடிவு எடுப்பதற்கு ஆராய்ந்துகொண்டு வருகிறார்கள் என்பதுதான். இன்னும் அதுபற்றி அரசாங்கத்தின் ஆலோசனையில் இருக்கிறபடியால் அதே பதிலை சொல்லவேண்டியிருக்கிறது.

SRI M. KALYANASUNDARAM : என்ன என்ன குறைபாடுகள் அரசாங்கத்தால் கண்டுபிடிக்கப்பட்டன. அவைகளை எந்த முறையில் நிவர்த்தி செய்யப்போகிறார்கள் என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : நடைமுறையில் சில கஷ்டங்கள் இருக்கின்றன. எப்படி நிவர்த்தி செய்யப்படும் என்பது பிறகு யோசிக்கப்படும்.

The Department has prepared sectional notes and we have received the remarks of the Board of Revenue. Now, after the passing of the Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, the question of framing the Tenancy Bill will be considered because we must know in what form that Bill is passed.